# குறள்நெறி

-குறள்நெறி **ஓங்கின் குடியரசு ஓங்கும்**-

*மின்னிதழ்:101 -மாசி-4--தி.பி.2056 பெப்புரவரி—16--- பொ.ஆ.2025*

**நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்**


அகத்தியர் புரட்டு கண்டனச் சிறப்பிதழ்



15

பிற்காலப் புலவர்கள் தம் முன்னோரின் வரலாறுகள் கிடைக்கப்பெறாத குறையைத் தம் கற்பனைத் திறனால் நிறைவு செய்யத் தொடங்கினர். இல்லாத வரலாற்றினைப் பொல்லாத முறையில் புனைந்து கூறி மகிழ்ந்தனர். ஒல்காப் பெரும் புகழ் தொல்காப்பியரும் உலகம் புகழும் பொருளுரை புகன்ற பொய்யில் புலவரும், பிற்காலப் புலவர்களின் நாவில், குயவனுர் கைப்பட்ட குழைமண் ஆகிவிட்டனர். கற்பனை சென்றவாறு கதைகளைக் கற்பித்தனர். காலப்போக்கில் கற்பனைக் கதைகளே உண்மை வரலாறுகளாக உருக்கொண்டன. காலவரையறை எனும் கரை காண முயல்வோரைக் கலங்க வைக்கின்றன; கண்ணிழக்கச் செய்கின்றன.

தமிழ்த் தொல்காப்பியரை ஆரியச் சமதக்கினியின் புதல்வராக்கினர். அகத்தியரின் மாணவர் எனக் கூறி அகம் மகிழ்ந்தனர். இக்கூற்றுகளால் தொல்காப்பியர் இராமன் காலத்தவர் என்று கூறுவதற்கு இடமேற்பட்டு விட்டது.

"சமதக்கினி, பரசுராமர் தந்தை, பரசுராமர் இராமர் காலத்தவர்; ஆகவே தொல்காப்பியரும் இராமர் காலத்தவர். தொல்காப்பியர், அகத்தியர் மாணவர்; அகத்தியர் இராமர் காலத்தவர்; ஆகவே தொல்காப்பியரும் இராமர் காலத்தவர். இராமர் காலம் கி.மு. 2000க்கு முற்பட்டது. தொல்காப்பியர் காலமும் கி.மு. இரண்டாயிரத்துக்கு முற்பட்டதாகும்." இவ்வாறெல்லாம் கூறுவதற்குக் காரணம் தொல்காப்பியரைப்பற்றி வழங்கும் கதைகளே. தொல்காப்பியர், சமதக்கினி முனிவரின் புதல்வர் என்பதும், அகத்திய முனிவரின் மாணவர் என்பதும் சான்றுகளுடன் நிறுவமுடியாத கற்பனையாம். " அகத்தியர்

பேராசிரியர் சி.இலக்குவனார்,தொல்காப்பிய ஆராய்ச்சி

## குட்டை முனியின் கதை பொய்

*ஆதி சிவன் பெற்றுவிட்டான் என்னை*
*ஆரிய மைந்தன் அகத்தியன் என்று ஓர்*
*வேதியன் கண்டு மகிழ்ந்தே நிறை*
*மேவும் இலக்கணம் செய்துகொடுத்தான்*

என்று பாரதி பாடியது தொன்ம நயக் கவிதை.

பாரதியின் அறிவியல் பார்வை வேறு.

*கடலினைத் தாவும் குரங்கும் வெம்*
*கனலில் பிறந்ததோர் செவ்விதழ்ப் பெண்ணும்*
*வடமலை தாழ்ந்ததனாலே தெற்கில்*
*வந்து சமன்செயும் குட்டை முனியும்*

*நதியின் உள்ளே முழுகிப் போய் அந்த*
*நாகர் உலகில் ஓர் பாம்பின் மகளை*
*விதியுறவே மணம்செய்த திறல்*
*வீமனும் கற்பனை என்பது கண்டோம்*

*ஒன்று மற்றொன்றைப் பழிக்கும்*
*ஒன்றில் உண்மை என்று ஓதி மற்றொன்று பொய் என்னும்*
*நன்று புராணங்கள் செய்தார் அதில்*
*நல்ல கவிதை பலபல தந்தார்*

*கவிதை மிக நல்லதேனும் அக்*
*கதைகள் பொய் என்று தெளிவுறக் கண்டோம்*
*புவிதனில் வாழ்நெறி காட்டி நன்மை*
*போதிக்கும் கட்டுக்கதைகள் அவைதாம்*

இரண்டுக்குமிடையில் ஊசலாடினார் பாரதி.

ஆனால், இருபத்தோராம் நூற்றாண்டில் இந்தத் தொன்மத்தை உண்மை என்று சொல்வது அடிமுட்டாள்தனம் அல்லது கடைந்தெடுத்த அயோக்கியத்தனம்.

மதிவாணன் பாலசுந்தரம்


**சிறப்பாசிரியர் குழு: முனைவர் பொற்கோ (முன்னைத் துணைவேந்தர், சென்னைப்பல்கலைக்கழகம்) முனைவர் இ.சுந்தரமூர்த்தி (முன்னைத் துணைவேந்தர், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம்) முனைவர் இர.பிரபாகரன் (மேரிலாந்து,அமெரிக்கா) முனைவர் அன்புசெயா (சிட்னி,ஆத்திரேலியா) பாவலர் முரசு நெடுமாறன் (மலேசியா) பேரா.மன்னர்மன்னன் (மலேசியா) பேராசிரியர் பெஞ்சமின் இலெபோ (பிரான்சு) கவிஞர் அழ.பகீரதன் (இலங்கை ) கலாநிதி சயந்தினி விக்னராசன் (இலங்கை) பொறியாளர் ச.இராசகுமாரன் (அயர்லாந்து) எலியாசு (சிங்கப்பூர்)திருமதி.மதிவதனி பத்மநாதன் (சுவிட்சர்லாந்து) திருமதி.தாமரை சீனிவாசராவ் (கம்போடியா) முனைவர் இராம சுந்தரம் (கொரியா) தீனதயாளன்(கனடா) பேராசிரியர் தமிழியலன் (சென்னை) இணையாசிரியர்; பாவலர் செல்வ.மீனாட்சிசுந்தரம்**

**பொறுப்பாசிரியர்: மறைமலை இலக்குவனார்**



## தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம்

### அறிவியல் மனப்பான்மையோடு செயல்படுக.

சென்னையில் செயல்பட்டுவரும் மத்திய அரசின் செம்மொழித் தமிழாய்வு நிறுவனம் சார்பில் 'அருந்தமிழ் கண்ட அகத்தியர்' என்ற தலைப்பில் பள்ளி மாணவர்களுக்கும், 'அகத்தியர் காட்டும் அறிவியல்' என்ற தலைப்பில் கல்லூரி மாணவர்களுக்கும் கட்டுரைப் போட்டிகள் அறிவிக்கப் பட்டுளளன.

இந்து மதப் புராணங்களில் சிவபெருமானின் திருமணத்தைக் காண அனைவரும் வடக்கே கைலாய மலைக்குச் சென்றதால் வடதிசை தாழ்ந்து, தென் திசை உயர்ந்துவிடவே, அதனைச் சமன் செய்வதற்காக சப்தரிஷிகளில் ஒருவரான அகத்தியரை சிவபெருமான் அனுப்பி வைத்தார் என்பது புராணக்கதை. சிவபெருமானிடமிருந்து தமிழைக் கற்று, தமிழுக்கு இலக்கணமும் எழுதி உலகுக்கே அவர்தான் தமிழ் மொழியைக் கற்பித்தார் என்றும், அகத்தியரின் கையிலிருந்த கெண்டிச்சொம்பைக் காக்கைத் தள்ளிவிட, அந்தக் கெண்டி சொம்புத் தண்ணீர் தான் காவிரியாக ஊற்றெடுத்தது என்றும் கட்டுக்கதையான அந்தப் புராணக்கதை நீண்டு போகிறது. இக்கதைக்கு எந்த வரலாற்று ஆதாரங்களும் இல்லை.

மொழி என்பது உழைக்கும் மனிதர்கள் தங்களிடையே தகவல்களைப் பரிமாறிக் கொள்வதற்காகத் தமக்குள் உருவாக்கியதே என்பதுதான் அறிவியல் உண்மை. காவிரி நீர் பெருக்கெடுப்புக்கு குடகு மலை நீர்பிடிப்பு பகுதியில் பெய்யும் பருவ மழை தான் காரணம் என்பது வெள்ளிடை மலை. இவ்வுண்மைகள் தெரியாத காலத்தில் ஒரு கற்பிதத்தை உருவாக்க உருவானதுதான் அகத்தியர் என்ற போலித் தொன்மம்.

தமிழறிஞர்கள் அகத்தியர் என்ற கற்பனைக் கதையை ஆதாரபூர்வமாக நிராகரித்தது வரலாறு . மகாகவி பாரதியார் கூட,

"வடமலை தாழ்ந்ததனாலே -தெற்கே
வந்து சமன் செய்யும் குட்டை முனியும்
கற்பனை என்பது கண்டோம்"

என்று பாடியுள்ளது இங்கே குறிப்பிடத்தக்கது.

மாணவ மாணவியருக்கான போட்டிகள் மட்டுமல்லாமல், அகத்தியர் குறித்த ஆராய்ச்சிகளுக்கு மத்திய அரசு நிறுவனங்கள் நிதி உதவி செய்யவிருப்பதாகவும் கூறப்படுகிறது. இது தமிழின் தொன்மையான வரலாற்றைப் புராணங்களின் அடிப்படையில் திருத்தி எழுதுவதற்கான எத்தனிப்பு என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. இது இந்திய அரசியலமைப்புச் சட்டம் உரக்கப் பேசும் அறிவியல் மனப்பான்மைக்கு நேர் எதிரானது. இவ்வாறு அறிவியல் மனப்பான்மைக்கு எதிராக மத்திய அரசு செயல்படுவதை உடனடியாக நிறுத்த வேண்டும் என்று தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் கேட்டுக்கொள்கிறது.

செம்மொழித் தமிழாய்வு நிறுவனத்தின் தலைவராக உள்ள மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் உண்மைக்குப் புறம்பான அகத்தியர் குறித்த ஆராய்ச்சிகளை நிறுத்திட உரிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்றும், தமிழ்நாட்டுப் பள்ளி கல்லூரிகளில் அகத்தியர் சம்பந்தமான போட்டிகள் நடைபெற அனுமதிக்க கூடாது என்றும் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் கேட்டுக்கொள்கிறது.

எஸ் கே கங்கா, மாநிலத் தலைவர்    த.அறம், மாநிலப் பொதுச் செயலாளர்.

## தொல்காப்பியம் Xஅகத்தியம் / ஐந்திரம் /இறையனார்

--முனைவர் அ.இராமசாமி

அண்மைக்காலத்தில் அகத்தியம் என்னும் கற்பனை நூலொன்றைப் பேசத் தொடங்கியிருக்கிறார்கள். அகத்தியரை உருவாக்கியவர் இறையனார்(சிவன் என்பது புராணம் ) அதன் பின்னணியில் இருக்கும் நோக்கங்களை விரிவாக எழுதவேண்டும்.

தொல்காப்பியத்தைக் குறிவைத்துப் பேச அகத்தியத்தைக் கையிலெடுப்பது, பெரியாரைக் குறிவைத்துச் சச்சரவுகளை உருவாக்குவது போன்றது. நவீன மொழியியல் முன்வைக்கும் எழுத்து, சொல் இலக்கணங்களுக்கு இணையாக மொழியைக் குறித்துப் பேசும் இலக்கணம் தொல்காப்பியம். அதேபோல் அரிஸ்டாடிலின் ' கவிதையியல் (Poetics ) ' என்னும் பனுவலைப் போல இலக்கியவியல் அடிப்படைகளைப் பேசுவது தொல்காப்பியப் பொருளதிகாரம். இதனைத் தமிழியல் ஆய்வுலகம் மட்டுமல்லாமல் அமெரிக்க, ஐரோப்பியப் பல்கலைக்கழகங்களில் இருக்கும் இந்தியவியல் துறைகளின் மொழியியல், இலக்கியவியல் துறைகளும் அவற்றின் பேராசிரியர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

தொல்காப்பியத்தைப் பின்பற்றி நடந்துள்ள ஆய்வுகள், நவீனப் பகுப்பாய்வு அடிப்படையில் நடந்தவை. அவற்றைத் திசைதிருப்பும் நோக்கத்துடன் அகத்தியம் / அகத்தியர் என்னும் கற்பனை முன் வைக்கப்படுகின்றது. புராணங்களை இலக்கியமாகக் கூட ஏற்காமல் விலக்கிவைத்த தமிழ் ஆய்வுப் போக்கை மாற்றிவிட நினைக்கிறார்கள். புராணங்களே இலக்கியம்; புராணங்களே வரலாற்றுத் தரவுகள் எனப் பேச நினைக்கும் நோக்கம் இதன் பின்னணியாக இருக்கிறது.

நான் முதுகலை மாணவனாக இருந்தபோது ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு மதுரையில் நடந்தது. அப்போது ஒரு சிறு குழு 'ஐந்திரம்' என்றொரு நூலை முன்வைத்தது. தொல்காப்பியப் பாயிரத்தில் 'ஐந்திரம் அறிந்த தொல்காப்பியன்' என்ற வரி இருப்பதால், இந்த ஐந்திரம் என்ற நூல் தொல்காப்பியத்திற்கு முந்தியது. அதனை எழுதியது இந்திரன் என்று பேசி/ எழுதி/ அச்சிட்டு மாநாட்டுக்கு வந்த பேராளர்கள் ஒவ்வொருவருக்கும் கொடுத்தார்கள். அப்போதைய முதல்வர் திரு எம்.ஜி.ராமச்சந்திரன் அச்சிட நிதி வழங்கினார். அரசின் வெளியீடாகவே வந்தது. ஆனால் அறிவார்ந்த பேராளர்கள் அந்த நூலைக் கருத்தரங்க அறைகளிலேயே விட்டுவிட்டுப் போனார்கள். ஒருவர் கூடப் பின்னர் அது குறித்துப் பேசவில்லை; எழுதவில்லை. ஏனென்றால் அது ஒரு கற்பனைப் பனுவல். திசைதிருப்ப உருவாக்கப்பட்ட நூல்.
இப்போது பாரதமொழிகளுக்கான அமைப்பு என்ற பெயரில் நிதியுதவி செய்து அகத்தியத்தை - அகத்தியரைக் கொண்டாடத் தொடங்கியிருக்கிறார்கள். சென்னையில் உள்ள செம்மொழித் தமிழாய்வு நிறுவனமும் பங்காளியாக இருந்து உதவுகிறது. நானறிய புதுச்சேரி மையப்பல்கலைக்கழகம், திருவனந்தபுரத்தில் உள்ள ஒரு மொழி ஆய்வு நிறுவனம், சென்னையில் உள்ள எஸ்.ஆர்.எம். பல்கலைக்கழகத்தின் தமிழ்ப்பேராயம் போன்றன அகத்தியம் குறித்த கருத்தரங்குகளை நடத்தியுள்ளன. இம்மூன்று கருத்தரங்கிற்கு முன்பே

செம்மொழி நிறுவனத்தில் அகத்தியர் குறித்துச் சொற்பொழிவு நடந்துள்ளது. செம்மொழி நிறுவனத்திற்குப் புதிதாக வந்துள்ள துணைத்தலைவர் வழிகாட்டல் இருக்கவே செய்யும். இவரது வருகைக்கு முன்பே செம்மொழி நிறுவனம், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களுக்குள் பக்தி, கடவுள், ஆன்மீகம், வேதமரபு போன்றவற்றைத் தேடத் தொடங்கிவிட்டது. அத்தகைய ஆய்வு செய்தவர்களைக் கொண்டாடவும் ஆய்வுப்பொருளாக்கவும் தொடங்கி விட்டது. தங்களுக்கென இலக்கியக் கோட்பாடும், இலக்கணவியல் பார்வையும் இல்லாத ஆய்வாளர்கள் கருத்தரங்குகள் நடத்தவும் கட்டுரைகள் படிக்கவும் தயாராகவே இருப்பார்கள்.

காசியில் தமிழ்ச்சங்கமம் நடத்தி, இலவசமாகப் பயண ஏற்பாடுகளும் சுற்றுலா வாய்ப்புகளும் கிடைத்தால் மறுப்பவர்கள் குறைவு. உறுதியான மொழி, இலக்கியப்பார்வை கொண்டவர்கள் மறுப்பார்கள், எதிர்நிலையில் கட்டுரைகளை வாசிக்க அனுமதித்தால் வாசிப்பார்கள். அப்படியில்லாதவர்களுக்குத் தேவை கல்விப்புல அங்கீகாரங்கள்; பதவி உயர்வுகள். அதனால் அவர்களைக் குறைசொல்லவும் முடியாது
இந்தத் திசை திருப்பல்கள் நடக்கும்போது தமிழ்நாட்டரசு தனது கவனத்தைச் செம்மொழி நிறுவனத்தின் பக்கம் திருப்பாமல் இருக்கிறது.அதன் தலைவராகக் கலைஞர் மு.கருணாநிதி இருந்தபோது சில ஆலோசனைக் குழுக்களை அமைத்திருந்தார். எண்பேராயம், ஐம்பெருங்குழு என்ற பெயரில் இருந்த அக்குழுக்கள் குறிப்பிட்ட கால அளவில் கூடி, அங்கு நடப்பனவற்றைக் கண்காணித்து ஆலோசனைகள் வழங்கின. ஆலோசனைக் கூட்டங்களுக்குப் பின் அவரைச் சந்தித்துக் கூட்டத்தில் விவாதித்தனவற்றை சொல்லிவிட்டுக் கலைந்தார்கள். அவற்றில் உறுப்பினர்களாக இருந்தவர்களில் பெரும்பாலோர் இப்போது அதைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்கிறார்கள்.
இப்போதும் தமிழ்நாட்டின் முதல்வர் தான் செம்மொழி நிறுவனத்தின் தலைவர். ஆனால் எண்பேராயமும், ஐம்பெருங்குழுவும் இப்போது இல்லை. அந்த இடத்தில் தான் புதிதாக உருவாக்கப்பட்ட துணைத்தலைவர் இருக்கிறார். அவருக்கு உதவவும் ஆலோசனைகள் வழங்கவும் வெளிப்படாத குழுக்கள் இருக்கவும் கூடும்.



தொல்காப்பியத்துக்கு முன்பே

# தமிழுக்கு இலக்கணம் வகுத்தவர் அகத்தியர்

எழுத்தாளர் மாலன் கருத்து

புதுச்சேரி

புதுவைப் பல்கலைக்கழக சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம் மற்றும் பாரத மொழிகள் குழு சார்பில் 'அகத்திய மாமுனிவரின் பங்களிப்புகள்' எனும் தலைப்பில் ஒரு நாள் தேசியக் கருத்தரங்கம் நேற்று நடைபெற்றது. நிகழ்ச்சிக்கு பல்கலைக்கழக துணைவேந்தர் (பொ) தரணிக்கரசு தலைமை வகித்தார். நிகழ்ச்சியில் 'அகத்தியரும் தமிழும்' எனும் தலைப்பில் எழுத்தாளர் மாலன் பேசியதாவது:

இந்திய சிந்தனை மரபில் சூரியனின் சுழற்சி அடிப்படையில் ஆண்டுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதேபோல் இந்திய மரபியலில் ஒருவரை குணம், பட்டம், இயல்பு ஆகியவற்றை கொண்டு அழைக்கப்பட்டுள்ளது. மொழிஎன்பதுஒருவரின்கருத்தை

**சங்ககால இலக்கியங்களில் 200-க்கும் மேற்பட்ட இடங்களில் சமஸ்கிருத எழுத்துகள் இடம்பெற்றுள்ளன.**

அடுத்தவருக்கு எடுத்துரைக்க உருவானது. ஆனால், தமிழில் எழுதுவது எழுத்து, கூறுவது கூற்று, மொழிவது மொழி என்ற தனித்துவமிக்க சிறப்புகள் உள்ளன. ஆங்கிலத்தைப் போலவே தமிழுக்கு இணை மொழியாக சமஸ்கிருதம் இருந்துள்ளது.

சங்ககால இலக்கியங்களில் 200-க்கும் மேற்பட்ட இடங்களில் சமஸ்கிருத எழுத்துகள் இடம் பெற்றுள்ளன. வடமொழியில் ரிக் வேதத்தில் அகத்தியரின் 27 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அதில் 21 பாடல்கள் ஒற்றுமையை வலியுறுத்துவதாக அமைந்துள்ளன. அதே நேரத்தில் தொல்காப்பியத்துக்கு முன்பே தமிழுக்கு இலக்கணம் வகுத்துத் தந்தவர் அகத்தியர். அவர் இந்திய பகுதிகளான வட, தென் பகுதிகளை இணைத்தவர். மனம் செம்மையானால் மந்திரம் செம்மையாகும் என்கிறார் அகத்தியர். அதையே வள்ளுவரும், பாரதியும் வலியுறுத்தியுள்ளனர். என்று தெரிவித்தார்.

முன்னதாக சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம் தலைவர் கருணாநிதி வரவேற்றார். புல முதன்மையர் சுடலைமுத்து தொடக்கவுரையாற்றினார்.

கல்வெட்டு ஆய்வாளர் வில்லியனூர் வேங்கடேசன் வாழ்த்திப் பேசினார். தமிழியற்புலம் இணைப் பேராசிரியர் ரவிக்குமார் நன்றி கூறினார்.

# அகத்தியரும் - தொல்காப்பியரும்

-----அரசு இரத்தினம்

தொல்காப்பியத்துக்குச் சிறப்புப் பாயிரம் எழுதியவர் பனம்பாரனார் என்று அறிகிறோம். அவர் அதில் குறிப்பிடுவது:

வட வேங்கடம் தென் குமரி
ஆயிடைத் தமிழ் கூறும் நல் உலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலம் தொகுத்தோனே போக்கு அறு பனுவல்
நிலம் தரு திருவின் பாண்டியன் அவையத்து
அறம் கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட்டு ஆசாற்கு அரில் தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி
மல்கு நீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றிப்
பல் புகழ் நிறுத்த படிமையோனே.

நிலம்தரு திருவின் பாண்டியன் என்ற ஒரு பாண்டிய மன்னனின் அரசவையில், அதங்கோட்டு ஆசான் என்பவரின் முன்னிலையில் தொல்காப்பியம் அரங்கேறுகிறது என்கிறது இச்செய்யுள். அகத்தியர் தொல்காப்பியரின் ஆசிரியர் என்றால் அவர் முன்னிலையில் அல்லவா இது அரங்கேறியிருக்கவேண்டும்? ஒருவேளை அகத்தியர் அதற்கு முன் இறந்துபோயிருக்கலாம். அல்லது வேறு ஏதோ காரணத்தினால் வர இயலாமல் போயிருக்கலாம்.

இருந்தாலும் அவரிடம் கல்வி கற்றதனாலேயே தொல்காப்பியர் தன் நூலை எழுதியிருந்தால் அவரது பெயரையாவது பனம்பாரனார் குறிப்பிடாமல் இருந்திருப்பாரா?

தொல்காப்பியரைப் போலவே அதங்கோட்டு ஆசானும் அகத்தியரின் மாணவர் என்றால், அதங்கோட்டு ஆசான் தொல்காப்பியரின் உடன் மாணாக்கர்தானே. அவர் முன்னிலையில் தன் நூலைத் தொல்காப்பியர் வெளியிட்டார் என்பது ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இல்லையே.

தொல்காப்பியத்துக்குப் பலர் உரை எழுதியிருக்கிறார்கள். அவற்றை எல்லாம் தொகுத்து தொல்காப்பியத்தின் ஒவ்வோர் இயலுக்கும் ஒரு புத்தகம் எனப் பல தொகுதிகள் தொல்காப்பிய உரைவளம் என்ற பெயரில் வெளிவந்துள்ளன.

அவற்றில் சிறப்புபாயிரத்துக்கென்றே ஒரு புத்தகம் உள்ளது.

ஆ.சிவலிங்கனார் பதிப்பித்திருக்கிறார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது.

அனைத்தும் அழிந்து ஒழிய தொல்காப்பியம் மட்டும் இத்தனை நூற்றாண்டுகளாக வாழ்ந்துகொண்டிருக்கிறது.

இறுதியாக ஒரு முக்கிய குறிப்பு.

ஆசிரியர் சிவலிங்கனார், அகத்தியர் – அகத்தியம் பற்றி, பல்வேறு அறிஞர்களின் கருத்துக்களை ஆராய்ந்து தன் முடிபாகவும், அதற்குச் சான்றாகவும் கீழ்க்கண்டவாறு கூறுகிறார், பக்கம் – 78

”மேலும் நச்சினார்க்கினியர் கூறிய அகத்தியர் – தொல்காப்பியர் கதை கட்டுக்கதை என்பதைப் பலர் – இரா.இராகவையங்கார், பேராசிரியர் பி.டி.சீனிவாச ஐயங்கார் போன்றோர் – கூறியுள்ளதையும் பாயிரம் படிப்போர் மனத்தில் கொள்ளவேண்டும்.”

அதன் அடிக்குறிப்பில் கொடுக்கப்பட்டுள்ளது:

1. இரா.இராகவையங்கார் – தமிழ் வரலாறு – பக்கம் 260
2. பேராசிரியர் பி.டி.சீனிவாச ஐயங்கார் – History of the Tamils, Page 224.

ஆக, நான்மறையாளர்களே அகத்தியர் – தொல்காப்பியர் கதை என்பது கட்டுக்கதை என்று சொல்லிவிட்ட பின் இன்று அந்த நான்மறைக் கூட்டம் அதற்குக் காற்றடித்து உயிரூட்ட முயல்வது நகைப்பிற்கிடமானது.

## "அகத்தியன் விட்ட புதுக்கரடி"

முனைவர் சிவ இளங்கோ, புதுச்சேரி.

"அகத்தியக் குள்ளன் ஆரியக் கொள்கையைப்
புகுத்தினான் செந்தமிழ்ப் பொன்னாடு அதனில்!
ஆதலால் குள்ளனை அணுவும் நம்பாதே
என்ற பழமொழி அன்று பிறந்தது!"
-- பாரதிதாசன்

அகத்தியன் பிறந்த கதையும், அவன் தமிழ்நாட்டுக்கு ஏன் வந்தான் என்ற கதையும் தெரியுமா உங்களுக்கு? தெரிஞ்சுதோ... நாக்கைப் பிடுங்கிக் கிட்டுதான் சாகணும்... அவன் கதையைத்தான் பாட்டாக எழுதினார் எங்க ஊரு பாவேந்தர் பாரதிதாசன். தொல்காப்பியருக்கே அகத்தியன் தான் வாத்தியார்ன்னு சொல்றவங்க முதல்ல அதைப் போய் படிங்க... அதுக்கு முன்னாடி அந்த நூலுக்குப் பாரதிதாசன் எழுதின முன்னுரை கீழே இருக்கு. இத மொதல்ல படிங்க...

"தமிழகத்தை - திராவிட நாட்டைத் தம் வழிப்படுத்த முதன் முதல் தமிழகத்தை அடைந்த ஆரியர் கூட்டத்தின் தலைமைப் பாதிரிதான் அகத்தியன். அவன் தமிழகத்தில் வந்து தமிழ்ப் புலவர்பால் தமிழைக் கற்றுக் கொண்டான். வாலை அவிழ்த்தான்... அரசனின் செல்வாக்கினால் நாளடைவில் பச்சைத் தமிழர் நூற்களை ஒழித்து, தன் நஞ்சு கலந்த காப்பித்தூளைப் பரப்பினான். அதை அரசன் அருந்த அனைவரும் அருந்தலாயினர். இதையே சுருக்கமாக அகத்தியன் விட்ட புதுக்கரடியில் சொல்லி உள்ளேன்".

--- பாரதிதாசன்

# எச்சரிக்கை! எச்சரிக்கை!

--இ.வளனறிவு

அகஸ்தியர் வடமொழியில் மட்டும் பலர்.

அகத்தியர் தமிழில் மட்டும் பலர் .

மேலை நாட்டு மொழிகளில் அகஸ்தியன் (அகஸ்டின் அகஸ்டஸ்) பலர்.

எவரும் வரலாற்று மாந்தர் அல்லர்

தொன்ம மாந்தர்களே.

கடந்த நூற்றாண்டில் துடிசைகிழார் எழுதிய அகத்தியர் வரலாற்றில் 32க்கு மேற்பட்ட புராணமாந்தர்களைக் கூறுகிறார்

1956 இல் அடிப்படைச் சான்றுகளோடுசைவப் பேரறிஞர் க.வெள்ளைவாரணனார் தொல்காப்பியத்தின் முந்துநூல் அகத்தியமன்று என்று நிறுவினார்.

புராணப் புரட்டுக்கள் வாலைச் சுருட்டி அடங்கின.

மீண்டும் சிலர் தற்போது புரட்டு பேசிக் கிளம்பி உள்ளனர் .

ஊடகத்தில் பொது விவாதம் வைப்போம்

. பூணூலகளின் புரட்டுக்கள் தமிழ் நூல்களைச் சிறைப்படுத்திய காலம் ஈரோட்டுக் கிழவனின் அறிவு நெருப்பில் பொசுங்கின .அறிவற்ற இரண்டகம் செய்யும் சீமானின் அடிமைத் தொழிலை (அவர் மொழியில் வெற்றுப் புளுகுக்குண்டு) நம்பி திரு மாலன் புரட்டு பேசுகிறார்.ஏற்கெனவே இலக்குவனார் பாவாணர் இளங்குமரனார் எனப் பலரும் புதைகுழிக்கு அனுப்பிய புரட்டுக்கதைகளைத் தோண்டும் வேலையை நிறுத்துங்கள்.

கொண்டாடுவதற்கு
சங்க கால ஔவையாரும்
ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனும்
மாங்குடி கிழாரும் இருக்கிறார்கள்!
மாங்குடி மருதன் தலைவனாகிய
புலவர் அவை பற்றிப் பேசும்
புறநானூறு இருக்கிறது!
காக்கா - கமண்டலம் கதை கேட்க இது
புராண காலம் இல்லை!
புள்ளிவிவரங்களின் காலம்!
"சொம்ப தூக்கி" உள்ளே வைத்துவிட்டு
சங்க இலக்கியம் படியுங்கள்

**--சிந்துவெளியியல் அறிஞர் பாலகிருட்டிணன்**

காசி தமிழ் சங்கமத்தின் 3-ம் ஆண்டை நினைவுகூரும் வகையில், சென்னையில் அகத்திய முனிவர் வேடமணிந்து ஊர்வலமாக சென்ற மாணவர்கள்.

### காசி தமிழ் சங்கமத்தின் 3-ம் ஆண்டு

## அகத்தியர் வேடமிட்டு மாணவர்கள் ஊர்வலம்

**சென்னை**

காசி தமிழ் சங்கமத்தின் 3-ம் ஆண்டை நினைவுகூரும் வகையில், சென்னையில் 100 மாணவர்கள் அகத்திய முனிவர் போல வேடமணிந்து நேற்று ஊர்வலமாக சென்றனர். தமிழ் செம்மொழி மத்திய நிறுவனம், சாஸ்த்ரா நிகர்நிலை பல்கலைக்கழகம் ஆகியவை இணைந்து இதை நடத்தின.

தியாகராயநகரில் உள்ள இந்தி பிரச்சார சபாவில் தொடங்கிய இந்த ஊர்வலம் அகத்திய முனிவர் ஆசிரமகோயிலில் முடிவடைந்தது. பிஎஸ் சீனியர், பிஎஸ்பிபி, பவன்'ஸ் ராஜாஜி வித்யாஷ்ரம், சாந்தி பனி வித்யாலயா ஆகிய பள்ளிகளில் 4 முதல் 8-ம் வகுப்பு வரை படிக்கும் மாணவர்கள் இதில் பங்கேற்றனர். பங்கேற்பாளர்கள் அனைவருக்கும் அகத்திய முனிவர் குறித்த அமர் சித்ர கதா பதிப்பகத்தின் நூல், பித்தளை கமண்டலம், பிரசாதம் ஆகியவை வழங்கப்பட்டன.

சாஸ்த்ரா பல்கலை. துணைவேந்தர் எஸ்.வைத்தியசுப்பிரமணியம், சென்னை சாஸ்த்ரா இயக்குநர் சுதா சேஷய்யன், தமிழ் செம்மொழி மத்திய நிறுவனத்தின் பதிவாளர் புவனேஸ்வரி, பிஎஸ் கல்வி சங்கத்தின் கேவிஎஸ் கோபாலகிருஷ்ணன், பாரதிய வித்யா பவன் இயக்குநர் வெங்கட், பவன்'ஸ் ராஜாஜி வித்யாஷ்ரம் முதல்வர் பிஜி சுப்பிரமணியம், சாந்திபனி வித்யாலயா முதல்வர் புவனா சங்கர் மற்றும் ஆசிரியர்கள், பெற்றோர்கள் இதில் பங்கேற்றனர்.



# உதவாதினி ஒரு தாமதம் உடனே விழி தமிழா

-----------இளங்கோவன் சுந்தரம்

தமிழ்நாட்டில் தமிழர்களை போலிக் கதைகளால் ஏமாற்ற ஒரு கூட்டம் இயங்கத் தொடங்கியுள்ளது. இந்த அவலக்கதையை மாண்புமிகு முதல்வர் அவர்களது உடனடி கவனத்திற்கு தமிழ் பேராசிரியர்களும் தமிழ் ஆய்வாளர்களும் தமிழ் இயக்கம் தமிழ் சான்றோர் பேரவை திருக்குறள் அமைப்புகள் கொண்டு செல்ல வேண்டும்

இத்தகுமுயற்சிகளுக்கு தமிழக அரசின் உதவியால் கிடைத்த நிலத்தையும் கட்டிடங்களையும் நிதியையும் நிறுவன தலைவர் என்று மாண்புமிகு முதல்வர் பெயரையும் பயன்படுத்தி ஏமாற்ற நினைக்கிறார்கள்

இது பற்றிப்பேராசிரியர் மதிவாணன் பாலசுந்தரம் ஆய்வாளர் பொதி மற்றும் பெரியார் உணர்வாளர்கள் தங்கள் கருத்துக்களை ஆய்வுச் சான்றுகளுடன் பகிர்ந்துள்ளனர்

விரிவாக மாண்புமிகு முதல்வருக்கு நிறுவனங்கள் விண்ணப்பம் அனுப்ப வேண்டும் .

மிகச் சிறிய அளவிலே நானும் அனுப்பியுள்ளேன் .

அத்துடன் செம்மொழி நிறுவனத்துக்கு தமிழில் முனைவர் பட்டமாவது பெற்றிருக்க வேண்டும் என்ற தகுதியை துணைத் தலைவருக்கும் ஏற்படுத்த வேண்டும் இதற்கு மாறாக அமர்த்தப்படுகிற வாய்ப்பை மாற்றுமாறு நடுவண்அரசுக்கும் நீதிமன்றம் வரையிலும் எடுத்துச் சொல்ல வேண்டும்.சிறிய முன்னெடுப்பாக தோன்றினாலும் பெரிய சதியின் அறிகுறி இது.உதவாதினி ஒரு தாமதம் உடனே விழி தமிழா

**About the Book**

Translating Kurals to natural English and at the same time keeping the original nuance has never been an easy task. In that sense, every Kural deserves tons of attention during the process of translation, and Professor Maraimalai's effort on this venture should be commendable. His dedication to the Tamil lore in general and his time on this effort should be appreciated by the Tamils at large.

Professor Maraimalai negotiates between English and Tamil very profusely and identifies the exact middle point for all of the Kurals he has translated. — **Vasu Renganathan**, Pennsylvania.

You have before you a new English version of an ancient classic. Maraimalai Ilakkuvanar taught Tamil language and literature for thirty-six years. He has continued to be a prolific scholar as an emeritus professor, and he is the author of nearly two dozen books. He is a passionate promoter of the Tamil tradition, from antiquity to the present. Thus, his perspective on and fidelity to the Tirukkuṟaḷ is welcome. -- **Robert N. Anderson**, Chapel Hill, NC, USA

All the couplets glitter with fine craftsmanship, with the qualities of unusual delicacy. In most of the cases, the proverbial taste sandwiched between the two original lines is neatly given in the translations quotable without sacrificing the flavour. The topic for each chapter is thoughtfully given into the overall conceptual presentation contained in the 10 couplets.-- Poet **Dr. Meignani Prabhakarababu**, President, International Association of Classical Tamil, Chennai.

Published by
**Centre for History And Archaeological Research**
29 Jalan Kathi Singapore 468675
www.chaarsg.com
ISBN 978-981-94-1738-4



THIRUKKURAL in English – Maraimalai Ilakkuvanar



## தமிழ் வெளியில் அகத்தியர்

---ஆர்.சீனிவாசன்

ஒரு பொருள்பற்றி ஆணித்தரமான, நம்பகமான கருத்துகளை யார் தரமுடியும்? அதில் வல்லுநரான, அத்துறையில் நீண்ட காலம் அனுபவம் கொண்ட, அதைப்பற்றி மிகுதியாகச் சிந்தித்த, எழுதிய வல்லுநர்கள் தான் அதைப்பற்றிக் கருத்துக் கூறுமுடியும். அதையே அனைவரும் ஏற்பார்கள்.

தொல்லெழுத்தியலின் தன்மைபற்றியும் அதன் வளர்ச்சி பற்றியும் தொல்லெழுத்து வல்லுநர்கள் தான் கூற முடியும். அதைப்பற்றி ஒன்றுமே அறியாதவர்கள் வாய்ப்புக் கிடைக்கிறது என்று மனம்போனபடி கூறுவதை யார் ஏற்பார்கள்? மனம்போனபடி கூறுதல் என்பதைவிட எப்படிக் கூறினால் தமக்கு ஆதாயம் கிடைக்குமோ அப்படிக் கூறுவது சிலரின் வழக்கம்.

ஒன்றைப்பற்றி நன்கு சிந்தித்து, அறிந்து கூறவேண்டும். இது அறிஞர்களின் முறை. ஒன்றைப்பற்றி எப்படிக் கூறினால் தமக்கு வேண்டிய ஆதாயம் கிடைக்குமோ அப்படிக் கூறுவது காரியவாதிகளின் முறை.

ஆதாயத்திற்காகக் கூறுபவர்கள் அதன் அடிப்படைகளைப்பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். யாரிடம் தமக்குக் காரியம் நடக்க வேண்டுமோ அவர்கள் விரும்பும்படி (திரித்துக்) கூறுவார்கள். இதை ஆதாயக் கூற்று என்று சொல்வார்கள் அறிஞர்கள். (நேர்க் கூற்று, அயற்கூற்று போல் இதுவும் பழைமையானதோர் கூற்று முறை).

அகத்தியர் தமிழ் இலக்கணத்தை இயற்றினார் என்று ஒரு புதுக்கரடியை விடுகிறார்கள். இதைப்பற்றிக் கூறவேண்டியர்கள், தமிழ் இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள், இலக்கண வரலாற்று ஆசிரியர்கள்தாம். ஆனால், அவர்கள் இப்படிக் கூறவில்லை. நம்பகமான, சான்றுகளுடன் கூடிய இலக்கிய, இலக்கண வரலாற்று நூல்களில் இவ்வாறு கூறப்படவில்லை.

இலக்கணத்தில் ஆழமான ஆய்வுகளைச் செய்தவர்கள் யாரும் அகத்தியர் தமிழ் இலக்கண நூலை இயற்றினார் என்று கூறவில்லை.

தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம், சிலப்பதிகாரம் முதலிய பண்டை நூல்களில் அகத்தியர் பற்றிய குறிப்புகள், கதைகள் இல்லை. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர்தான் தேவாரத்திற்கு ஒரு திரட்டுச் செய்த அகத்தியர், மருத்துவ நூல் இயற்றிய அகத்தியர் முதலான கதைகள் தோன்றுகின்றன. இவற்றுக்கு இறையனார் பெயரில் சொல்லப்படும் அகப்பொருள் இலக்கண நூலின் உரை முதலியவை தோற்றுவாய் ஆகலாம்.

அகத்தியர் ஒரு சமயத்திற்கு மட்டும் உரிய தொன்மமா? சைவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்களில் அகத்தியன் என்ற தொன்மம் உள்ளது.

பௌத்த நூலான வீரசோழியம் என்ற இலக்கண நூல் (11ஆம் நூற்.) பின்வருமாறு கூறுகிறது.

“ஆயும் குணத்து அவலோகிதன் பக்கல் அகத்தியன் கேட்டு
ஏயும் புவனிக்கு இயம்பிய தண்டமிழ்” (பாயிரம் 2)

“பலரும் ஆராய்ந்து போற்றும் பண்பினை உடைய அவலோகிதனிடத்தில் அகத்தியன் மாணக்கனாக இருந்து பாடம் கேட்டுத் தெளிந்து” (76)

என்று இதற்கு உரையும் எழுதப்பட்டுள்ளது. (பெருந்தேவனார் உரை)

அகத்தியர் தமிழ் இலக்கணம் இயற்றினார் என்பது ஒரு வழக்கமான கூற்றே தவிர உண்மை அல்ல. இந்த நூலில், பௌத்த சமயத்தவரான அவலோகிதனிடத்தில் அகத்தியன் தமிழ் அறிந்தார் என்று கூறப்பட்டுள்ளதை நோக்கும்போது கதைகள் இப்படிப் பலவாகத் தோன்றியுள்ளதைத் தெளிவாக அறியலாம்.

தெய்வமாக் கவிகளேனுந் தென்குமரி ஆசானேனும்
மெய்ம்மையைத் திரித்துரைப்போர் 'நய'வஞ்சகரே!

**-முதுமுனைவர் வே.மு.பொதியவெற்பன்**

"வையம் என்னை இகழவும், மாசு எனக்கு
எய்தவும், இது இயம்புவது யாது எனின்,-
பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக் கவி மாட்சி தெரிக்கவே." -
கம்ப நாடன்
பண்டிதர்கள் தூற்றிட பழிச்சொல் ஏற்றபடி
இதை ஏன் எழுதுகிறேன்?
பூரணமெய் சொன்ன பெருங்கவிகள் அருளிய
கடவுள் காவியங்களின் பெருமை பெருகிப் பரவ." -
சரவண கார்த்திகேயன்,எனில் ஆசான் சீர்பராவு சரவண கார்த்திகேயா!கலை உரைத்த கற்பனையே :
1•'மகாகவிகள் ஆயினும் வஞ்சகரே!'

"புராணப் பனுவல்கள் ஆராய்ச்சியில் புடைக்கப்படுதல் வேண்டும். மெய்யாராய்ச்சியில் நிலைபெறுவனவே தழுவத்தக்கன. ஏனைய தள்ளத்தக்கன. சரித்திரம் செம்மை பெறுதல் வேண்டும்".

"கவிநயங்களைப் பாராட்டுவதில் குற்றமில்லை.அவற்றை மெய்யென மயங்குதலே தவறாகும்" - Kavai Palanisamy (கா.சு.பிள்ளையின் ஆராய்ச்சித்திறன்')இது தொன்மங்களை எவ்வாறு உள்வாங்க வேண்டும் என்பது குறித்த கா.சு.பிள்ளையின் துல்லியமான கணிப்பு. மட்டுமல்லாமல் அவருடைய வரலாற்று மெய்ம்மை நாட்டமும் இதற்கூடாகக் காணக்கிடக்கின்றது. இன்னொரு வகையில் பெரியாரால் நம்பகமான ஆய்வாளராகராகவும்; சைவ சித்தாந்திகளால் தமக்கான 'தொல்லாணை நல்லாசிரியர்' ஆகவும் ஒருசேர ஏற்கப்பட்டவரே கா.சு.பிள்ளை."18 புராணங்களை இயற்றி, அக்கதைகளே உண்மை வரலாறு என்று மக்களை நம்ப வைத்தனர் பாரதப் பௌராணிகர்கள். அப்புராணங்களில் அவதாரம் என்ற கதாபாத்திரங்களை உருவாக்கி, அவர்தம் வாயாலேயே, 'நானே நான்கு வர்ணங்களை உருவாக்கினேன்' என்று சொல்லவைத்து மக்களை நம்பவைத்து ஈராயிரம் ஆண்டுகளாக ஏய்த்துவந்த தெய்வ மாக்கவிகளின் முகத்திரையைக் கிழித்துக் காட்டியவர் வள்ளலார்.'கலை உரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும்/ கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக' என்று சாடினார். அதில் இருந்த உண்மையை உணர்ந்த பாரதி எழுதினான். "உண்மையை வலியுறுத்தவே கற்பனையும் கலையும். மாறாக உண்மையை மறைத்துப் பொய்மைக்கு முலாம்பூசி உண்மையெனத் திரித்துக் காட்டுவது மகாகவிகள் ஆயினும் வஞ்சகரே என்பது வால்டேரின், வள்ளலாரின் வாதம்"

## கம்பியே இல்லாமல் கம்பி கட்டும் கதை!

---சிந்துவெளியியல் அறிஞர் பாலகிருட்டிணன்

தொல்காப்பியர் தம்முடைய தொல்காப்பியம் என்னும் இலக்கணநூலில் உள்ள எழுத்ததிகாரத்தில் ‘பிறப்பியல்’ எனும் தலைப்பின்கீழ் ஒலிகளுக்கான பிறப்பு இலக்கணம் கூறுகிறார்.

இவர் கூறும் பிறப்பு இலக்கணத்தை இன்றைய மொழியியலார் பெரிதும் போற்றுகின்றனர். இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் அடிப்படையில் ஒலிகளின் பிறப்பை ஆராய்ந்து பார்க்கும்போது தொல்காப்பியர் பல நூற்றாண்டுகளுக்கு முன் பிறப்பியலில் சொன்ன கருத்துகள் பெரும்பாலும் ஒத்துப் போகின்றன.

தொல்காப்பியர் தமது இலக்கண நூலில்,

உந்தி முதலா முந்து வளி தோன்றி,
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇ,
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புஉற்று அமைய நெறிப்பட நாடி,
எல்லா எழுத்தும் சொல்லுங் காலை
பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல
திறப்படத் தெரியும் காட்சி யான

(தொல்.எழுத்து.83) என்றார்.

வளி என்பது உலகைச் சூழ்ந்துள்ள காற்று. நாம் பேசும்போது வளி உந்தியிலிருந்து தோன்றும்.

(உந்தி என்பது காற்றை உந்தும் diaphragm. உந்தி உறுப்பானது அடிவயிற்றுக்கும் மூச்சுப்பைக்கும் இடையில் உள்ளது)

உந்தியில் தோன்றும் வளி தலையிலும், மிடற்றிலும், நிலைகொள்ளும்.

மிடறு என்பது தொண்டையில் உணவுக்குழாயையும், காற்றுக்குழாயையும் மிடைந்துவைக்கும், அதாவது மடைமாற்றும் pharynx.

அங்கிருந்து பாய்ந்து பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகியவற்றில் ஒலியைத் தோற்றுவிக்கும்.

ஆனால் தமிழ் மொழியும் சமஸ்கிருத மொழியும் சிவபெருமானின் உடுக்கையிலிருந்து தோன்றியது என்று ஒரு கட்டுக்கதை காலப்போக்கில் கிளப்பி விடப்பட்டது.

உடுக்கையின் ஒரு புறத்திலிருந்து பிறந்த சமஸ்கிருதத்தை சிவபெருமான் பாணினி ( வடமொழி இலக்கண ஆசிரியர்) யிடம் ஒப்படைத்தாராம்! அது போலவே உடுக்கையின் இன்னொரு புறத்தில் பிறந்த தமிழை அகஸ்தியர் கையில் ஒப்படைத்தாராம்! அதை அகஸ்தியர் கொண்டுவந்து தமிழுக்கு இலக்கணம் எழுதினாராம்!

தொல்காப்பியர் அகத்தியரின் பெயரை ஒருபோதும் எங்கும் குறிப்பிடவில்லை. "என்மனார் புலவர்" அறிந்திசினோரே, தெரிந்திசினோரே, நூலறி புலவர் என்று பன்மையில் தான் குறிப்பிடுகிறார்.

எனவே தமிழை அகத்தியர் சிவனிடம் பரிசாக வாங்கி தோளில் சுமந்து கொண்டு வந்து இலக்கணம் எழுதினார் என்பது ஒரு "கம்பி கட்டும் கதை" அவ்வளவு தான்.

அதற்கு மேல் இதில் வேறொன்றுமில்லை.

அகத்தியருக்கு மீண்டும் " கட் - அவுட்" வைக்க இப்போது இந்தியா முழுவதும் "படி அளக்கப்" படுகிறதாம்! இந்த முயற்சியில் வெளிமாநிலங்களில் உள்ள தமிழ்ச்சங்கங்களும் பல்வேறு பல்கலைக்கழகங்களும் பயன்படுத்தப்படுவதாகச் சொல்கிறார்கள்!

"செய்கூலி" வாங்கிக்கொண்டு "ஆதாரச்சேதாரம்" செய்ய "வாடகைப் புலவர்கள்" காத்திருக்கிறார்கள்! கவனம் தேவை!




நாவலர் சோமசுந்தரபாரதியார் மறுப்புரை

பொதுப்பாயிரம் 13

பண்டைத் தமிழகத்தில் ''காப்பியர்'' எனும் இயற்பெயர் தமிழரிடைப் பெருவழக்குடைத் தென்பது, அப்பெயருடைய புலவர் பலர் பண்டைத் தொகைச் செய்யுட்கள் செய்தவராய்க் கூறப்பெறுவதால் நன்கறியலாம். ஒருபெயருடையோர் பலரிருப்பின் அவரிடை வேற்றுமை விளங்கவேண்டி ஏற்புடை அடைகள் அவரவர் பெயரொடு தொடுக்கப்படுஞ் செவ்விய முறையும் தொன்றுதொட்டின்றுவரை நின்றுவரு முண்மை யாவருமறிந்ததே. பல்காப்பியர், காப்பியாற்றுக்காப்பியனர், சேந்தன்தந்தை காப்பியனர், எனக் காப்பியர் எனும் பெயருடைய புலவர் பலரைக் கேட்கின்ருேம். அப்பெயருடையார் எல்லார்க்கு மிந்நூலுடையார் காலத்தால் முந்தியவராதலின், இவற் இயற்பெயரொடு தொன்மை சுட்டுங் குறிப்படைகூட்டித் தொல்காப்பியரெனப் பண்டைப் புலவரால் பாராட்டப்பெற்றனராதல் வெளிப்படை.

தமிழ்ப்பெரியார் அனைவரையும் ஆரியக்கலப்புடையராக்கித் தலைசிறந்த தமிழ்நூல்களுக்கு வடநூற் சார்பு கற்பித்துக்கொள்ளுவதே பெருமையெனக் கருதிய இடைக்காலத்தவர், இறந்த ஆரிய அகத்தியரை எழுப்பித் தமிழ்நூற்கே அவரை முழுமுதற் குரவரென்ருெரு கதை கிளப்பித், தமிழ்த் தொல்காப்பியரை ஆரியப் பார்ப்பனராக்கியதோடமையால் அவரை இல்லாஅகத்தியற்குப் பொல்லா மாணுக்கருமாக்கி முடித்தார். ''காப்பியன்'' எனும் தமிழ்ச்சிறப்பியற்பெயரைக் ''காவியன்'' எனும்வடசொற் றிரிபாக்கிக், 'கவி' மரபுடைய சுக்கிரன் குடிப்பிறப்பைச் சுட்டும் காரணப் பொதுப் பெயராக்கி, இரண்டாமூழித் துவக்கத்தில் இராமனுக்கு மூத்த பரசுராமனுக்கு இவரைத் தம்பியாக்கிப் பிறகு மூன்ருமூழி யிறுதியில் வடமதுரையாண்ட கண்ணன் உதவிபெற்றுத் தமிழகத்து வந்து குடியேறியவராக ஒரு பொய்ப் புராணமும் புனையப்பெற்றது. இதற்கு வடநூல்களிலும் பழைய தமிழ்ச்செய்யுட்களிலும் ஆதரவு யாதுமில்லை. இவ்வாறரும் பாடுபட்டுத் தமிழ்க் காப்பியனை ஆரியக் கவிக்குலப் பார்ப்பனுக்கியதோடமையாமல், 'தொல்காப்பியர்' எனும் அவர் தமிழ் நூற் பெயரையும் தொல்காப்பியமென வடநூற் தத்திதாந்த விதிப்படித் திரித்து வழங்கலாயினர். இஃது, இந் நூற் பாயிர வரலாற்றுக்கும் தமிழிலக்கண மரபுக்கும் முற்றிலும்

அகத்தியர் பெயரிலான புரட்டை 1930 ஆம் ஆண்டில் அன்றைய மாநிலக்கல்லூரிப் பேராசிரியரைக் கொண்டு ஆய்வுசெய்யவைத்து நூலாக வெளிட்டவர் அறிஞர் போற்றும் அறிஞர் தந்தை பெரியார். இந்த நமச்சிவாயர் தாம் பொங்கலைத் தமிழர் திருநாள் எனக் கொண்டாடுமாறு அறிக்கை வெளியிட்டவர்.

# அகத்தியர் ஆராய்ச்சி

காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார்,தமிழ்ப்பேராசிரியர், மாநிலக்கல்லூரி,சென்னை
வெளியீடு,குடியரசுப் பதிப்பகம் 1930

தமிழர் வடமொழிக்கும் தென்மொழிக்கும் சமத்துவம் கூற தலைப்பட்ட முயற்சியால் இவ்வாறு கற்பனைகளை எல்லாம் விளைவித்துக் கொண்டனர் இக்காலத்தில் தமிழ் அறிஞர்களும் மேல்நாட்டு புலவர்கள் மொழியின் நிகழ்வுகளை நன்கு ஆராய்ந்து வடமொழியல்பு வேறு தமிழ் இயல்பு வேறு வடமொழியான நாகரீக வேறு தென்மொழியான நாகரிகம் வேறு என ஆராய்ந்து முடிவுக்கு வருகின்றனர் இவ்வாறு முயற்சி நாளும் சிறப்புக்கு விளங்குவதாக.

மற்றும் திரணதூமாக்கிணி முனிவர் தாமே தொல்காப்பியரா? அகத்தியனார் தென்னாடு வருகையில் ஜமதுக்கினியாருழைச் சென்று  திரணதூமாக்கிணி முனிவரைப் பெற்றுக் கொண்டு வந்தனர் எனத் தொல்காப்பியப் பாயிரவுரை கூறும்.பின்னர், அவர் பெயர் தொல்காப்பியினார் என மாறியதற்கு யாதும் காரணம் கூறப்படவில்லை. ஆகவே திரணதூமாக்கிணி   முனிவரே தொல்காப்பியனார் எனப் பெயர் பெற்றனர் என்பது பொருந்தாது.. அன்றியும் அவரே தொல்காப்பியன் எனக் கொண்டால் அவர் 8,100 ஆண்டு வாழ்ந்திருத்தல் அசம்பாவிதமாகும். வெள்ளூர் காப்பியன் என மற்றொரு பெயர் வருவது போல ஒரு தொல்காப்பியன் பெயர் பெற்ற வேறொருவரே என்பது பெறப்படும்.

ஆயினும் வடமொழியாளர் கொள்கை இந்நாட்டில் பரவிய பின்னரே தொல்காப்பியம் எழுதப்பெற்றிருத்தல் வேண்டும்.நானிலங்களுக்குக் கடவுள் வகுக்கும்போது ஆரிய தெய்வங்கள் குறிக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பிய ஆராய்ச்சி செய்தால் இவை அனைத்தும் நன்கு விளங்கும். ஆகவே திரணபிந்து எனப் பெயர்பெற்ற  திரணதூமாக்கிணி என்பவர் அகத்தியரோடு வந்தவராக இருக்கலாம். அவரே ஜாவா முதல் இடங்களுக்கு சென்று இருக்கலாம் இதுவும் பிற்காலத்தில் நிகழ்ந்த செய்தியாகும். தமிழ்நாட்டில் இருந்த தொல்காப்பியரே தொல்காப்பியம் இயற்றினர் என்க.

அகத்தியர் கடலைக் குடித்தார் என்னும் வரலாறு அகத்தியனார் கடலைக் கடந்து ஜாவா முதலிய தீவுகளுக்குச் சென்றதை உணர்த்த எழுந்த கதை என்பர் கங்கௌலி என்பார். அதன் பொருட்டு அவர் வீதசாகரர் எனப் பெயர் பெற்றார் என்றும் கூறுகின்றனர். கடலைத் தாண்டியதைக் கடலைக் குடித்தனர் என்பது அசம்பாவிதம். ஆனால் அகத்திய நட்சத்திரம் என்று ஒன்று இருப்பதனால் அது தோற்றும் காலத்துக் கடல் நீராவியாக மாறுவதால் வற்றுகிறதென்றும் அது மறையும் காலத்து மழை பெய்து சமுத்திரம் நிறைகிறதென்றும் வானநூல் வல்லார் கூறுவர். இதனையே அகத்தியர் கடல் நீரைக் குடித்தனர் என்றும் அதனையே பின்னர் பெய்தனர் என்றும்  உருவகப் படுத்திச் சொல்லினர் என்று தோன்றுகின்றது. ஆகவே அகத்தியனாரைப் பற்றிய செய்திகளை இம்மட்டோடு நிறுத்திக் கொள்வோம்

இனி அகத்தியர்கள் வேத அகத்தியர் என்றும் புராண அகத்தியர் என்றும் இரண்டு பிரிவினராகப் பிரிக்கலாம்.

அகத்தியர் என்பதற்கு அகத்திக் கீரை மூலிகை கொண்டு வாழ்ந்திருந்தவர் எனப் பொருள் கொள்ளலாம். இதைப்பற்றி மகாமகோபாத்தியாய குப்புசாமி சாஸ்திரியார் அவர்களிடம் கேட்டபொழுது அப் பெயருக்கு வேறு தக்க பொருள் கிடைக்க மட்டும் இதனையே கொள்ளலாம் போலும் என்றனர்.

அகத்திக்கீரை இன்னும் சிறந்த அவுசதமாகக் கொள்ளப்படுகின்றது அன்றியும் இவ்வாறே பல முனிவர்கள் மூலிகைகளின் பெயர்களால் வழங்குவது பிரத்தியட்சம். வாதராயனர் என்பது இலந்தைக் காட்டில் வசிப்பவர் என்று பொருள் கொள்வது காண்க.

இவ்வாறு பல்வேறுப்பட்ட அகத்தியர்கள் ஆங்காங்கே நிலைத்து ஆரியர்களுடைய வழக்க ஒழுக்கங்களையும் சிவபெருமானது தெய்வத்தன்மையும் விளக்கிக் கொண்டு தென்னாட்டிற்கும் தென்னாட்டை அடுத்த தீவுகளுக்கும் சென்றனர். அவருள் ஒருவர் தமிழ் கற்று அகத்தியம் செய்தனர். அது கொண்டே அவரைச் சிவபெருமானுக்கே ஒப்பானவர் என்றும் சிவபெருமானிடத்துத் தமிழ் கற்றனர் என்றும் தமிழர் கூறத் தொடங்கினர். அப்படித் தொடங்கிய பிறகு பல்வேறு கதைகள் அவரைப் பற்றி பரவுவனவாயின. நண்பர் சிவராஜ பிள்ளை அவர்கள் அகத்தியர் கதைகள் ஒற்றுமைப்படக் காணவில்லை என்றும் அதனால் அகத்தியர் ஒருவர் இருந்தனரோ என்றும் ஐயங்கொள்ளுவதற்கு எழுந்த காரணம் அகத்தியர் ஒருவரே அவர் கொண்ட கருத்தெனத் தோன்றுகிறது.[ப.35-36]

அகத்தியர் வைத்தியம் எனத் தமிழ்நாட்டில் வழங்குகின்றது. அதைக் குறிக்கப் பலவகை நூல்கள் தோன்றியுள்ளன இவையன்றி வாதம், சோதிடம் முதலியனற்றிற்கும் நூல்கள் குறிக்கப்பட்டுள்ளன. அவையெல்லாம் பார்க்கும் பொழுதே அகத்தியர் செய்தன அல்ல என்பது புலப்படும். அந்த அகத்தியர்களுக்குள்ள எவரோ ஒருவர் வைத்திய முறையை வைத்திருக்கலாம். அதை பயிற்சிகளுக்குக் கொண்டு வந்த சிலர் புதிதாக நூல்கள் செய்து அவர் பெயரால் புகுத்தி இருக்கலாம் சமீப காலத்தில் இருந்த அகத்தியக் குடும்பன் எனும் ஒரு பள்ளன் தனக்குத் தெரிந்த வைத்திய முறைகளைப் பாடல்கள் செய்து ''அகத்தியன் சொன்னேன் நானே'' என முடித்திருக்கின்றானாம். இவ்வாறு பெரும்புலவர்கள் பெயரை அழிக்கச் சில காலமாகச் சிற்சிலர் தோன்றியிருக்கின்றனர். பதினேழாம் நூற்றாண்டின் இடையிலிருந்த தேசிங்குராசனைப் பற்றி புகழேந்திப் புலவர் பாடினர் என்பது எவ்வளவு பொருத்தமுடையது என்பது கூற வேண்டியது இல்லை. வெள்ளியம்பல தம்பிரான் பாடிய பாடல்கள் ராமாயணம், பெரியபுராணம், தேவாரம் முதலிய நூல்களில் எழுதி இருப்பதினால் எவ்வளவு இடர்ப்பாடுகள் உண்டாகின்றன.

இனி இருக்கு வேதத்தில் வந்த செய்திகளை நான் கேட்ட பொழுது தெளிவுறத் தெரிவித்த மகாமகோபாத்தியாய குப்புசாமி சாஸ்திரியார் அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனத்தை செலுத்துகின்றேன்.முற்றிற்று.[பக்கங்கள் 34,35&36]